Registered No. M. 2330






சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு"



| | | |
|---|---|---|
| மலர் எ | ஸ்ரீமுக ஆண்டு தைத் திங்கள் 1934 ஆம் ஜனவரிமீ | இதழ் க |



சைவ சித்தாந்த மகா சமாஜ

28 - ஆம் ஆண்டு நிறைவு விழா

## தலைமைப் பேருரை

திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார்

பற்றாங்கவை யற்றீர் பற்றும் பற்றாங்கது பற்றி
நற்றாங்கதி யடைவோமெனிற் கெடுவீரோடி வம்மின் !
தெற்றார்சடை முடியான் மன்னு திருப்பெருந்துறை யிறைசீர்
கற்றாங்கவன் கழல்பேணின ரொடுங்கூடுமின் கலந்தே.

சிற்றம்பலமேய செல்வன் கழலேத்தும்
சித்தாந்த சைவச் செல்வர்களே !

சைவசமய வுண்மைகளை மக்களனைவரும் உணர்ந்துய்யுமாறு செய்யவேண்டுமென்னும் பெருநோக்கங் கொண்டு இற்றைக்கு இருபத்தெட்டாண்டுகளின் முன் சான்றோர்

களால் நிறுவப்பெற்று நாளும் தழைத்தோங்கி வருகின்ற சைவசித்தாந்த மகாசமாசம் என்னும் திருநெறிப் பெருங் கழகத்தின் இவ்வாண்டு விழாப் பேரவைத் தலைமையைச் சிறியனேற்களித்த கழக அன்பர்கட்கு எனது அன்பு அளை இய வணக்கத்தைச் செலுத்துகின்றேன். இப்பேரவைத் தலைமை பூண்டற்கு வேண்டும் அறிவும், மதுகையும் பிற தகுதியும் உடையனல்லேனுகலின் இப்பேற்றினை ஏற்றற்கு உள்ளங் கூசினேனுகவும், அன்பரிட்ட பணியை மறுத்தற் கும் ஆற்றலின்றியே இதற்கு ஒருப்படுவேனுயினேன். இந் நிலையில் என் அறியாமையால் நிகழுங் குற்றங்களை நீங்கள் பொருத்தருளற்கு யான் வேண்டுதல் வேண்டா.

அன்பர்களே! மன்பதைகள் உய்ந்திடுதல் வேண்டிக் கடவுளருள்பெற்ற பேரறிவுடைய பெருமக்கள் கண்ட நெறியே சமயம் எனப் படுவது. ஆதலின் அது கடவுள் வகுத்தது எனவும் அமைவுடைத்தே. உலகிலே சமயம் என்பது இன்று நேற்று உண்டாயதன்று; பல்லாயிரம் ஆண்டுகளாகவே யுளது. யாதானுமோர் ஒழுங்கிற்குட்பட் டொழுகும் மக்கள் வாழ்க்கை, என்றுதொட்டுளதோ அன்றுதொட்டே சமயம் என்பதும் உளதாம். சமயத் தொடர்பு சிறிதும் இல்லாத நாட்டினரையோ கூட்டத்தின ரையோ நாம் ஒருபொழுதும் கண்டதுமில்லை; கேட்டது மில்லை. இடத்தானும் காலத்தானும் பல்வேறு குழுவின ராகப் பிரிந்த மக்களின் அறிவு செயல்களின் வேறுபாட்டிற் கேற்பவும், நெறிவகுத்தோர்களின் அறிவு அகக் காட்சிகளுக் கேற்பவும் சமயம் பலவாயின. எல்லாச் சமயங்களும் மக்கள் உயர்நிலையடைய வேண்டுமென்னும் பெருநோக்க முடை யனவே. அவையாவற்றிற்கும் பொதுவான அறங்களும் ஒழுக்க நெறிகளும் உள்ளன. உலோகாயதம் தொடங்கிப் படிப்படியாக உயர்ந்துள்ள சமயங்கள் பலவும் பண்டைக் காலந் தொட்டே யுள்ளன. எந்தச் சமயத்தினரேனும் அந்தச் சமயநெறியில் ஒழுகுவரேல் மேன்மையுறுவது ஒரு தலை. எனினும் சமயங்கள் யாவும் ஒரு நிகரானவே என்று தல், ஒரு பெற்றியுடைய பயன் விளைப்பன என்றுதல் கூறு

83/4



தல் பொருந்தாது. ஒரு மொழியின்கண் நெடுங்கணக்கு முதல் அறிவுநூல் இறுதியாகவுள்ள அனைத்து நூலும் அம் மொழியாளர் பயிலுதற்குரியனவும், அவர்கட்கு இன்றி யமையாதனவுமாம் எனினும், அறிவு நூல்களின் துறை போகிய ஒருவன் மீட்டும் நெடுங் கணக்கும் சிற்றிலக்கியமும் பயிலுதல் அவமாதல் போல, முடிந்த வுண்மைகளைக் கூறும் சமயநெறி யுற்றோனொருவன் மீட்டும் கீழ்ப்படியிலுள்ள சமயங்களை நோக்கிச் சேறல் அவமேயாகும்.

திருநெறிச் செல்வர்காள்! உலகிலே பல்வேறு சமயங்க ளிருப்பினும், நாம் முதன்மையாகச் சைவத்தை ஆராயும் கடமைப்பாடுடையோம். சைவசமயம் எப்பொழுது உண்டாய தெனக் காலவரையறைக் குட்படுத்துரைக்க வியலாத அத் துணைப் பழமையுடையதாகவுள்ளது. தமிழிலும் வடமொழி யிலுமுள்ள தொன்னூல்களெல்லாம் சைவத்தின் தொன் மைக்கும் முதன்மைக்கும் சான்று பகர்கின்றன. பண்டைத் தமிழ்ச் சங்கத்துச் சான்றோர் பலரும் பல கடவுளரைக் கூற நேர்ந்த இடங்களிலெல்லாம் சிவபெருமானையே முதற்கண் வைத்துக் கூறுவாராயினர். அதுவேயன்றி இன்றியமையாக் கடவுட் டன்மையாகிய பிறப்பிறப்பின்மையைச் சிவபெருமா னுக்கே உரிமையாக்கியும் கூறியுள்ளனர். சிலப்பதிகார வாசிரி யர் "பிறவா யாக்கைப் பெரியோன்" என்றதனால் பிறப் பின்மையும், சிவசத்தியாகிய கொற்றவையைக் கூறுமிடத்தே, "விண்ணோ ரமுதுண்டுஞ் சாவ வொருவரும் - உண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்குவாய்' எனச் சார்த்தி யுரைத் தமையால் இறப்பின்மையும் கறைமிடற் றிறைவற்கே யுரிய வாகக் குறித்தவாறு காண்க. இங்ஙனம் சிவபெருமானது முழு முதன்மையைக் குறிப்பிடுஞ் சான்றுகள் மற்றும் எண் ணிறந்தன வுள்ளன. முதுகுடுமிப் பெருவழுதி என்பவன் பஃறுளியாறு கடல்கோட் படாதிருந்த பழங்காலத்தில் விளங்கிய ஓர் தமிழ் வேந்தன். அவனைப் பாடிய புலவரொரு வர் "முக்கட் செல்வர் கோயிலை வலஞ்செய்தற்கண் நின் குடை தாழ்க" எனப் பணித்தமையால் பல்லாயிரவாண்டு களின் முன்பே சிவபிரானுக்குத் திருக்கோயிலிருந்த செய்தி

வெளியாகின்றது. அகத்தியர், பதஞ்சலி, புலிக்காலர், உப மன்னியு, மார்க்கண்டர் முதலிய முனிவர்கள் சிவபெருமானை வழிபட்டுப் பேறு பெற்ற சீரடியார்களாவர். பண்டைக் காலத்து முனிவர்கள் பலருமே சிவ வழிபாடுடைய ரென்ப தனை வியாச பாரதத்து அநுசாசன பருவம் முதலியவற்று லறியலாகும். மான்றோல், புலித்தோல், சடைமுடி முதலிய சிவ சின்னங்க ளுடையராகவே அவர்கள் கூறப்படுதலுங் காண்க. சுருங்கக் கூறுமிடத்து இமயமுதற் குமரிகாறும் பரதகண்ட முழுதும் பண்டை நாளில் விளங்கிய வேந்தர் களும் முனிவர்களும் ஏனை மாந்தர்களும் முழுமுதற் பொரு ளாகக் கொண்டு வழிபட்ட கடவுள் சிவபெருமானே ; அவர் கள் ஒழுகிய நெறி சைவமே எனல் சாலும். அயல் நாடுகளி லும் சிவலிங்க வழிபாடு போல்வதொரு வழிபாடே இருந்த தென்பதற்கும் ஆதரவுகள் உள்ளன. உண்மை இவ்வாறுக வும் சிலர் நடுநிலை திறம்பிச் சிவனையும் சைவத்தையும் இகழ்ந்து நிரயத்துக்காளாகின்றனரே எனப் பரிந்தன்றோ,

"கூவ லாமை குரைகட லாமையைக்
கூவலோ டொக்கு மோகட லென்பபோல்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே"

என்று திருநாவுக்கரசுகள் அருளியதூஉ மென்க.

இனி, இங்ஙனம் பழமை பெருமை வாய்ந்த சைவ சமயத்தின் இயல்புகளையெல்லாம் நமக்குத் தெளிய அறி வுறுத்தும் தமிழ் நூல்கள் திருமந்திரமும், திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞான போதம் முதலிய மெய் கண்ட நூல்கள் பதினான்குமாகும். பன்னிரு திருமுறையுள் திருமந்திர மொழிந்த முதற்பத்தும் இறைவனை வழுத்தும் துதிகளாகவும், பெரிய புராணம் திருத்தொண்டர்களின் வர லாறு கூறுவதாகவும் இருப்பினும், அவற்றுள்ளும் சைவசம யத்தின் உண்மைகளே ஆண்டாண்டுப் பொதிந்து கிடக்கின் றன. எனவே, சைவர்கட்குப் பிரமாணமாகவுள்ள நூல்கள் பன்னிரு திருமுறைகளும், பதினான்கு சித்தாந்த நூல்களு

8314.



மாம். இவையன்றித் திருக்குறள் என்னும் தமிழ் மறையும் சைவர்கட்குப் பிரமாண நூலே யாகுமென்க. வடமொழியி லுள்ள ஆரணவாகமங்கள் சைவ முதற்பிரமாணங்களேயாயி னும் அவற்றின் ஞானகாண்டப் பொருளை மயக்கமற அறி வுறுத்துஞ் சிறப்பினாலும், சைவ சமயத்தை நிலை நாட்டிய பெருமையாலும், யாவரும் ஓதி உய்தி பெறுதற்குரிய எண்மையாலும் தமிழ் நூல்களே முதன்மையாகப் போற்றற் குரியனவாம். சைவம் உலகில் இன்று நின்று நிலவுவதற்குத் திருஞான சம்பந்தர் முதலிய பெருமக்கள் தோன்றித் திருப் பதிகங்கள் பாடிப் புறச்சமயங்களை வென்று சிவபிரான் முழு முதன்மையை நிலை நாட்டினமையே காரணம் என்பதனை அன்றென்பார் யாவர்? இனி, இத்தகைய சைவசமயத்தின் உண்மைகள் யாவையென்னின், அவற்றை இங்கு யான் விரித்துரைக்கக் கருதிற்றிலேன்.

"பதிபசு பாச மெனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாச மனாதி
பதியினைச் சென்றணு காபசு பாசம்
பதியணு கிற்பசு பாசநில் லாவே"

என்னும் திருமந்திரச் செய்யுள் சைவத்தின் கோட்பாடு இன்னதென்பதனைச் சுருக்கமாக அறிவுறுத்துகின்றது. இங்கே விரிவுரையாற்ற வந்திருக்கும் பெரியோர்கள் சைவத் தின் உண்மைகள் பலவற்றை விளங்க எடுத்துரைப்பார்க ளாதலின் அவற்றைக் கேட்டுணர்ந்து பயனுறுவோமாக. சைவச் சார்புள்ள பொது வகையான சில கருத்துக்களைமட் டும் இங்கே நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகின்றேன்.

சைவம் என்பது துவைதம் என்றும், சைவசித்தாந்தி கள் துவைதிகள் என்றும், தாங்களே பழுத்த அத்துவைதி கள் என்றும் சிலர் கூறுவதுண்டு. சைவ சித்தாந்த நூல் களில் யாண்டும் அது துவைதம் என்று கூறப்படவில்லை. 'அத்துவைதம்' என்னும் சொற்கு ஏனையோர் கொண்ட பொருள்களின் வேறாயதொரு மெய்ப்பொருள் கண்டமையி

ருலேயே சிவஞானபோத வாசிரியர்க்கு மெய்கண்டார் என்னும் திருப்பெயர் உளதாயிற் றென்பதனை,

> "பொய்கண்டார் காணுப் புனிதமெனு மத்துவித
> மெய்கண்ட நாதனருள் மேவுநா ளெந்நாளோ"

என்னும் தாயுமானவடிகள் திருவாக்கு விளக்குதலுங் காண்க. சைவ சித்தாந்தத்தை அத்துவிதம் என்றலே அமையுமென்னினும் விசிட்டாத்துவிதம் முதலியவற்றின் வேறுபாடு தோன்றச் சுத்தாத்துவிதம் என ஆன்றோர் வழங்குவராயின ரென்க.

உலகிலுள்ள சமயவாதியரில் சிற்சிலர் கடவுள் அருவப் பொருளேயன்றி உருவப் பொருளன்றென்பர். அருவமும் உருவத்தின் நுண்மையே யென்பதனையும், விசும்புபோலும் சடப்பொருளும் அருவமாதலின் அருவம் என்பதனுற் கடவுளுக்கு ஓர் ஏற்றமின் றென்பதனையும் அவர்கள் ஓர்ந்திடல் வேண்டும். அருவம், உருவம், அருவுருவம் என்னும் மூன்றுங் கடந்ததே கடவுளின் உண்மை நிலையென்றும், உயிர்கள் மேல் வைத்த கருணையால் அம்மூவகை வடிவையும் இறைவன் எடுத்தருள்வனென்றும் சைவ சித்தாந்தம் கூறும். இறைவன் நினைத்ததொரு வடிவினை எடுத்துக்கொள்ளமாட்டாத குறைபாடுடையனல்ல னென்பதனையும், அதனுல் அவன் இன்னவாறு வந்திடான் என்று அவனது பேராற்றலுக் கிழுக்குண்டாகக் கூறுதல் தகவன் றென்பதனையும் உணர்தல் வேண்டும்.

இனி, சில சமயத்தினர் உருவ வழிபாடு கூடாதென்றும், அது தாழ்ந்த நிலையென்றுங் கூறுவர். பிரமசமாசம் போன்ற கூட்டத்தினரும் அங்ஙனங் கூறுவர். மக்கட்கு உருவ வழிபாட்டினுல் வரும் இழுக்கின்று என்பதனையும், அஃது இன்றியமையாச் சிறப்பினதென்பதனையும் விளக்கலுறின் இம்முகவுரை விரிந்துவிடுமாகலின் வாளா விடுகின்றேன். ஆனுல், உருவ வழிபாடு கொள்ளற்பாலதா, தள்ளற்பாலதா என நாம் புதுவதாக ஆராய்ந்து முடிவுகட்ட வேண்டியதில்லை யென்பதனை நம்மவர்கள் கருத்தில் வைக்கவேண்

டும். இதனை மிகமிக வற்புறுத்தியவர்கள நம் சமயகுரவர்கள். மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையராய், இறைவனுல் வலிதின் விரும்பி ஆட்கொள்ளப் பெற்ருேராய், அவனது எல்லையில்லாத பேரருளைப் பெற்று யாவர்களுஞ் செய்யவொண்ணுத செயல்களைச் செய்தோராய் விளங்கி, நமது சமயத்தை நிலைநாட்டிய அருட்குரவர்கள், தங்கள் பதிகங்களால் உருவ வழிபாட்டை வற்புறுத்தி யதனேடு அமையாது, தாங்களும் பதிகடோறுஞ் சென்று வழிபாடு செய்து போந்தனரென்ருல், அவர்கள் காட்டிய வழியே நாம் உய்யும் நெறியாகக் கடைப்பிடித்து ஒழுகலே நமது கடமையாம். அது தாழ்ந்த நிலையென்று நினைப்பது அறியாமையேயாம்.

இனி, சைவம் என்ருல் அஃது ஒரு சிறு கூட்டத்தாரின் குறுகிய கொள்கையெனக்கருதும் பேரறிவாளரும் உளர். ஏனைச் சமயத்தினரிற் போல சைவரென்போரிலும் குறுகிய கொள்கையுடையார் இருத்தல் கூடும். என்னினும், சைவ சமயம் குறுகிய கோட்பாட்டதென்பது சிறிதும் பொருந்தாது. பிற சிறப்புக்கள்பற்றிச் சைவசமயம் பாராட்டப்படாதொழியினும், வேறெச் சமயத்தினுங் காணப்படாத அத்துணை விரிந்த நோக்கமும், பரந்த கொள்கையும் உடைத்தாதல் பற்றியேனும் அது யாவரானும் பாராட்டப் பெறுதல்வேண்டும். எந்த வுயிரையும் எப்பொழுதும் நிரயத்துக் கிடந்துழலுமாறு சைவசமயம் விட்டு விடுவதில்லை. வெவ்வேறு தகுதியுடைய மக்கள் அனைவர்க்கும் ஏற்றபடி முறைகளை வகுத்து, எல்லோரையும் உயர்நெறியிற் செலுத்திப் பேரின்பமளிப்பது அதன் இயல்பாம். வேறு எச்சமயத்தையும் உலகிற்கு வேண்டாவென அது வெறுத்து ஒதுக்குவதுமன்று.

"சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி இந்நெறியே காண் சன்மார்க்கம்."

என்று தாயுமானவடிகளும்,

"விரிவிலா அறிவி ஞர்கள் வேறெரு சமயஞ் செய்தே
எரிவினுற் சொன்னு ரேனும் எம்பிராற் கேற்றதாகும்"

என்று திருநாவுக்கரசுகளும் அருளிச்செய்தன இங்கே சிந்

திக்கற்பாலன. மற்றும் சைவத்தின் பரந்த கொள்கையை வரலாற்று வாயிலாகப் பெரிய புராணம் தெளிவுபடுத்துதல் கண்கூடு. குலவேற்றுமை, நிலைவேற்றுமை, பால் வேற்றுமை என்பன ஆண்டவனை வழிபட்டுப் பேறு பெறுவதற்குத் தடையாவன அல்ல. எல்லோரும் வீடு பெறுதற்குரியர் என்பதே சைவத்தின் கொள்கை.

இனி, சைவசமயமானது பழந்தமிழ் மக்களுடைய கடவுட் கொள்கையின் வேறுபட்டதன்றாகலின் நாமும் அம்முறையே சமயத்தைப் பேணி ஒழுகுதல் கடனாகும். தமிழருடைய கொள்கைகளைச் செவ்விதின் விளக்குவன தொல்காப்பியம், திருக்குறள் என்ற இரண்டு பெருநூலுமாம். தெய்வப் புலமைத் திருவள்ளுவனார், மக்கள் வாழ்க்கை நிலையை இல்லறம் துறவறம் என இரண்டாக வகுத்துக் கொண்டு இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மைப்பேறும் எய்துதற்குரிய வழிகளை மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். கற்றுத் துறைபோய காதலனும் காதலியும் அன்பும், இன்சொல்லும், அடக்கமும், ஒழுக்கமும், மிக்கராய்த் தீவினைக்கஞ்சி, அறத்தாற்றினீட்டிய பொருளால் விருந்தோம்பல், ஒப்புரவாற்றல், வறியார்க்கீதல் முதலிய அறங்களைச் செய்து வாழ்தல், இல்லற வாழ்க்கை யாமென்றும், அதன் இம்மைப் பயன் இன்பமும் புகழுமாக, மறுமைப் பயன் துறக்கம் பெறுதலென்றும், இல்லறம் கடைபோய வழி எல்லாவுயிர்களிடத்தும் அருளுடையராய், வாய்மை, கொல்லாமை முதலிய விரத வொழுக்கங்களைக் கடைப்பிடித்து, மனந்தூய்மையடைந்து நிலையாமை கண்டு, இருவகைப் பற்றும் அற்று, மெய்ந்நூற் பொருள்கள் கேட்டல் முதலியவற்றால் மெய்யுணர்வெய்தி, முக்குற்றங்களினீங்கி யிருத்தல், துறவற வாழ்க்கையாமென்றும், அதன் பயன் பிறவித் துன்பத்தினின்று நீங்கிப் போாவியற்கையாகிய பேரின்பப் பெருவாழ்வுறுதலென்றும் யாவரும் இனிதின் உணருமாறு கூறியிருக்கும் திறப்பாடு எத்துணையும் போற்றற்குரிய தொன்றாம். உயிர்கள் யாதேனும் ஒன்றனைப் பற்றியே நிற்கும் இயல்பினவாதலின் அவை அகப்பற்றும் புறப்பற்றுமாகிய

பசு, பாசப்பற்றினீங்குதற்கு ஆசிரியர் கூறியுள்ள வுபாயம் பதியாகிய கடவுளைப் பற்றுதலேயாம் என்பது,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்னும் பொருளுரையால் விளக்கமாம். கடவுளைப் பற்றுத லெனினும் அவனோதிய வீட்டு நெறியைப்பற்றி யொழுகுத லெனினும் இடையறாது அவனைச்சிந்தித்தலேயாம். எனவே, மனையின்கண் கூடி வாழ்வாராக, வனத்தின்கண் தனித்து வாழ்வாராக, இறைவனைப்பற்றி நின்று ஏனைப் பற்றுக் களின் நீங்கினரே பிறவியறுத்து வீடுபெறுதற்குரியாரென் பது ஆசிரியர் கருத்தாதல் பெறப்படும்.

தொல்காப்பியனாரும் ஒவ்வொருவரும் தத்தம் ஒழுக லாற்றின் மேம்படுதலே வாகையாமென்று வாகைத்திணைக்கு இலக்கணங் கூறி, அதன் பகுதியாகிய துறைகள் கூறிவரு மிடத்தே,

"கட்டமை யொழுக்கத்துக் கண்ணுமையானும்
இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்,
பிழைத்தோர்த் தாங்கும் காவலானும்,"

என்னும் பகுதியால் இல்லற ஒழுக்கத்தையும்,

"அருளொடு புணர்ந்த வகற்சியானும்
பொருளொடு புணர்ந்த பக்கத்தானும்
காமம் நீத்த பாலி னானும்."

என்னும் பகுதியால் துறவு, மெய்புணர்வு, அவாவறுத்தல் களையும் குறிப்பிடுவாராயினர். இப்பகுதிகட்கு இளம்பூரண ரும், நச்சினார்க்கினியரும் திருக்குறளையே மேற்கோளாகக் கொண்டு, இல்லற வியல்பு, துறவற வியல்புகளை விரித்துக் காட்டி உரைவகுத்திருத்தலும் காண்க. மற்றும், நச்சினார்க் கினியர் "காமம் நீத்த பாலினானும்" என்பதற்கு உரை கூறியவிடத்தே பால், என்றதனால் உலகியலுள் காமத்தினைக் கைவிட்ட பகுதியினையுங் கொள்க" என வுரைத்து,

"இளையர் முதிய ரெனவிருபால் பற்றி
விளையு மறிவென்ன வேண்டா—இளையனாத்

தன்றுறை காம நுகர்தற்குத் தான்காமம்
ஒன்றுறு நீத்தான் உளன்'

என மேற்கோள் காட்டி யிருத்தலும் சிந்திக்கற்பாலது.

இல் வாழ்க்கையராயினும், புற வாழ்க்கையராயினும் இறைவனைப்பற்றி நின்று, ஏனைப்பற்றுக்களின் நீங்கினரே வீடு பெறுதற்குரிய ரென்னும் இவ்வுண்மைக்குப் பெரிய புராணத்துக் கூறப்பட்ட திருத்தொண்டர்களின் வரலாறுகள் சிறந்த எடுத்துக் காட்டுக்களாம். திருமுறைகளும், சித்தாந்த நூல்களும் இவ்வுண்மையை விளக்குவனவே. யான் தொடக்கத்திற் கூறிய "பற்றுங்கவையற்றீர்" என்னும் திருவாசகத் திருப்பாட்டின் கண் இக்கருத்து இனிது விளங்குதல் காண்க. பற்றற்குரியதனைப்பற்றித் துன்பத்திற் கேதுவாய பற்றுக்களின் நீங்கி நற்கதியடைய விரும்புவீரெல்லாம் விரைந்து ஓடிவம்மின்! திருப்பெருந்துறை இறைவன் சீரைக் கற்றல் செய்ம்மின்!! அவன் கழல்களைப் பேணி வழிபடுமின்!!! வழிபடும் அடியாரோடுங் கூடுமின்!! என்று வாதவூரடிகள் நம்மனோர்க்கருளிச் செய்யுந் திறன் இருந்தவாறென்னே!

இங்ஙனம், தமிழ்நூற் கருத்தும், சைவசித்தாந்த வுண்மையும் வேறாகாமையை எண்ணும் பொழுது, பண்டைத் தமிழ் மக்களின் வேறு சில உயரிய பண்புகளும், கொள்கைகளும் நம் நினைவிற்கு வரக்கூடியனவாகவுள்ளன. எந்தக் கடவுளரையோ, சமயத்தையோ இகழ்தலென்பது பழைய தமிழரிடத்து ஒரு சிறிதும் காணப்படாததொன்று. அத்தகைய சிறந்த பண்பினை நாமுங் கொண்டு, ஏனையோருங் கொள்ளுமாறு செய்யின், சமயப் பூசல் என்பது இல்லாது ஒழியும். திருமால் வழிபாடு சைவர்கட்குப் புறம்பாயதொன்றன்று. மற்றும், எச்சமயத்தினர் தங்கள் சமயமே உயர்ந்ததெனக் கூறினும் அன்னார்க்கு அவ்வுரிமை உண்டென்பதனை மதித்து நம் நிலையினின்று வழுவாதிருத்தலே நமது கடனும். எந்தச் சமயத்தையோ, சமயக் கடவுளரையோ எள்ளி நகையாடல் என்பது புன்மையாம் என்பதனைக் கருத்திற் பதிப்போமாக. (தொடரும்)

சைவ சித்தாந்த மகா சமாஜ

# இளைஞர் மகாநாட்டுத் தலைமைப் பேருரை

திரு. நீ. கந்தசாமி பிள்ளை

பன்னெடுங் காலம் பணிசெய்து பழையோர்
தாம்பல ரேம்பலித் திருக்க
என்னெடுங் கோயி னெஞ்சுவீற் றிருந்த
எளிமையை என்றுநான் மறக்கேன்
மின்னெடும் புருவத் திளமயி லனையார்
விலங்கல்செய் நாடக சாலை
இன்னடம் பயிலும் இஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே.—திருவிசைப்பா.

அன்பரீர் !

திருவருட்டுணை கொண்டு இவண் கூடியுள்ள இளைஞர் மகாநாட்டிற்குத் தலைமைதாங்க எளியேனைப் பணித்த நுங்கள் பேரன்பிற்குப் பெரிதும் கடமைப் பட்டுள்ளேன். தலைமை தாங்கற்கேற்ற பல சிறப்புகளுள் ஒன்றேனும் வாய்க்கப் பெறுத யான் இப்பணியை மேற்கொள்ள மிகவும் அஞ்சினே னெனினும், ‘முத்தமிழால் வைதாரையும் வாழ வைக்கும்’ முருகன் திருவருளும் தங்கள் பேரன்பும் துணை நிற்ப, ஒருவாறு ஆற்றலொண்ணும் எனும் துணிவு பிறப்ப முன்வந்து சில சொல்ல எண்ணுகின்றேன். குற்றம் நிகழின் அன்பர்கள் பொறுத்தருள்வீர்களாக.

இந்நாளிலே, உலகத்தின் பல பகுதிகளிலும் பலவகையான கூட்டங்கள் நடைபெறுகின்றன. இவைகட்கு அடிப்படையாக உள்ளவை, அவைகளைச் சார்ந்த மக்களிடையே காணப்பெறும் சில பொதுத் தன்மைகளேயாகும். சிலர் நாட்டின் ஒற்றுமை கருதிக் கூடுவர் ; சிலர் மரபு ஒற்றுமை கருதி ஒன்றுவர்; சிலர் தாங்கள் செய்யும் தொழில் ஒற்றுமை கருதிச் சேர்வர். இங்கு கூடியுள்ள நாமோ, எக்காலத்தும்

மாருது நின்று மக்களுக்கு இம்மையும் மறுமையும் நல்வாழ் வளிக்கும் 'சைவ சித்தாந்தம்' என்னும் சமயத்தையும் தத்துவத்தையும் உடைமையாகக் கொண்டுள்ளோம் என்னும் உணர்வினுலும் ஒற்றுமையினுலும் ஈண்டுக் குழுமி, நமது சமயத்திற்கும், அதைச் சார்ந்தார்க்கும், உலகுக்கும் ஆவனவாற்றித் தொண்டியற்றும் வழிகளை எண்ணித் துணிய முன் வந்திருக்கின்ருேம். இறைவன் திருவருளும் நம்முயற்சியும் ஒன்றுக.

இளைஞர் இயக்கங்கள் பல பகுதிகளில் பலவகையாகத் தோன்றியுள்ளவெனினும், அவற்றின் கொள்கைகள் இரு பெரும் பிரிவினுள் அடங்குவனவாகும். ஒன்று:—மக்களால் இதுவரை கையாளப் பெற்றுவந்த எல்லாக் கொள்கைகளும் முன்னேற்றத்திற்கு தகுதியற்றனவென்பதும், உலகம் உயர்வடையவேண்டின் பழங்கொள்கைகளாய மாளிகைகளை இடித்துத் தகர்த்துப் பொடிசெய்து, இப்பொழுதைய அறிவு நிலைக்கேற்பப் புதுக் கொள்கைகளைப் பல துறைகளிலும் பரப்பி நிலைபெறச் செய்யவேண்டுமென்பதுமாகும். ஏனையது:—சில நூற்றுண்டுகளாகத்தான் உலகம் தடுமாற்றமடைந்துள்ளது; இக்காலத்திய அல்லல்கள் யாவும் அத்தடுமாற்றத்தின் விளைவேயாகும்; பண்டை நாட்களில் உலகமும் மக்களும் இருந்த நிலையை நன்கு தெரிந்து அக்காலத்து நிலவிய கொள்கைகளை மீண்டும் நிலைபெறச் செய்யின் நலமுறற்கேதுவாகுமென்பது. இத்தகைய மாறுபாட்டிற்குப் பல காரணங்களுண்டு. அவற்றை ஈண்டு விரிக்க வேண்டா.

நமது இயக்கமோ, முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளைத் தலைவனுகக் கொண்டுள்ளது; அத்தலைவனே பின்னைப் புதுமைக்கும் புதுமையாம் பெற்றியன். அன்னவன் நிலை அன்னதாகலின் அவனடிபோற்றும் நாமும் பழையன விடாது புதியன போற்றும் கடமை உடையோமாவம். எவ்வியக்கமும் நற்பலனடைதற்குத் தெள்ளிய நோக்கமும் நடை முறைகளும் இன்றியமையாவாகலின் நாமும் நமது நோக்கத்தையும் நடை முறைகளையும் ஒருவாறு ஆராய்ந்து தெளிய முயல்வோம்.

சைவ இளைஞர்கள் என்ற முறையில் நமக்கு உரிமையாகக் கிடைத்துள்ள உடைமைகளுட் சிலவற்றை ஆராய்ந்து, அதன் வழி நமது நோக்கம் எத்தகையதாகவிருக்க வேண்டுமென்று தெளிந்து, அம் முறையில் நமது கடமைகளுட் சிலவற்றையும் கருதி, அவற்றை யாற்றும் நடை முறைகளை உறுதி செய்வதே இக்கூட்டத்தின் முயற்சியாகும். யானும் முகவுரையாக, நமது உடைமைகளுட் சிலவற்றைப் பற்றியும் கடைமைகளுட் சிலவற்றைப் பற்றியும் என் சிற்றறிவிற் கேற்பக் கூற முன்வருகிறேன். யான் இங்குக் கூறப் புகுவன யாவும் சைவ இளைஞர்கள் என்ற நமது நிலையிலேயே யாகலின், ஏனைய நிலையில் நமக்குள்ள உரிமை, உடைமை, கடமைகளை மறந்ததாகக் கருதமாட்டீர்கள் என எண்ணுகின்றேன். நமது உடைமையாகக் கருதி இன்று இங்கு கூறப் புகுவனவெல்லாம், நமது சமயமும், தத்துவமுமாகிய சைவ சித்தாந்தத்தைப் பற்றியும், அதினின்றும் பிரிக்கவொண்ணு வியைபுடைய செந்தமிழைப் பற்றியும், நமது சமய உண்மைகளும், முன்னோர் உள்ளப் பாங்கும் அவர் கலைத்திறனும் அன்னவர் கைவன்மையும் பருவுடற்கொண்டு நின்ருலன்ன நிலைபெற்று ஒளிபரப்பி நம் உயிர்ப் பண்புகள் இறந்துபடாது குற்றுயிர் கொண்டேனும் நிற்பதற்குதவும் திருக்கோயில்களைப் பற்றியுமேயாகும். கடமைகளும் அவை குறித்தே.

மக்கள், அறிவு வாய்க்கப்பெற்ற மிக்க பழங்காலந் தொட்டே, யாதேனும் ஒருவகையில் தம்மாற்றலுக்கு மேற்பட்ட தொன்றுளது என்ற உணர்ச்சியால், தாம் மேற்பட்டதாகக் கருதும் ஒன்றை அவ்வக்கால நிலைக்கும், மன நிலைக்கும் ஏற்ப வணங்கி வந்திருக்கிருர்கள். எந்த நிலையிலும், தங்கள் உடலைப் போற்றுதலில் கருத்துடையவர்களானமையின் தங்கள் உடலுக்குத் தீங்கிழைக்கவல்ல பொருள்களிடத்து ஒருவகையான அச்சம் பிறந்து அதன் பயனுக அவற்றை வணங்கத் தொடங்கினர். இதுவே இறைவன் அச்சவுருவினனுக மக்கள்பால் அருள் செலுத்திய நிலையாகும். இந்நிலையில் பலவகைப் பிரிவுகளும் வழிபாட்டு முறைகளுமுண்டு. சமய வளர்ச்சியில் இந்நிலையின் எல்லைக்கல்லாக நமது நாட்டில் நாக

வணக்கத்தைக் கூறலாம். பின்னர் பல மாறுதல்களடைந்து இறைவனை அன்புருவாகப் போற்றுவாராயினர். இதன்விரிவுகளும் பிரிவுகளும் பல; அவற்றைச் சுருக்கிக் கூறுதற்கேனும் இவண் இடமில்லை. இந்நிலையின் எல்லைக் கல்லாக நமது மர வணக்கத்தைக் கூறலாம். பின்னர் இது விரிந்து இறைவனை அருளுருவனாக வணங்கும் நிலையில் நின்றது. இந்த நிலைகள் பலவும் பல்லாயிர வாண்டுகளாக நமது நாட்டில் நின்று மறைந்து, கூடி விரிந்து வருவனவாயின.

நமது சைவமோ இறைவனை அருளுருவினனாக வழிபடும் பழுத்த நிலையிலுள்ளது. பல நிலைகளிலும் இந்நாடு ஒவ்வொருகாலம் நின்றிருந்தமையால், ஒரு நிலை மறைந்து மற்றொரு நிலை தோன்றுங்காலத்து, மறைந்த நிலையின் சிலபண்புகள் உருக்கரந்து, புதிய நிலையில் கலந்துகொள்வது முண்டு. முடிந்த நிலையாகி நின்ற அருட்கனி பழுத்த நமது சைவசமயத்திலும் இறைவனை உருவகப்படுத்திப் புகழுங்கால், அச்சம், அன்பு முதலிய சமய நிலைகளின் எச்சங்களும் ஓர் ஓர் வழி உருக்கரந்து நிலவுவதைக் காணலாம். சமயத்தொடர்பான பழவரலாறுகளிலும், வழிபாட்டு முறைகளிலும் இக்கலவை நேர்ந்துள்ளது. சமயவுண்மைகளை உருவகப்படுத்தி மறைபொருளாகத் தெரிவித்த நமது சைவப் பெரியார்களும் உருவகமுறையில் சிலஅருள்சிறவாப் பழங்கதைகளைப் பயன்படுத்தியுமிருக்கிறார்கள். இந்நுட்பங்களை அறிந்து கோடும் அமைதியில்லாத சிலர் உண்மை தெரிந்துகொள்ள வியலாது சிற்சில உருவகக் கதைகளைக்கொண்டு தடுமாற்றமுற்று பிறழவுணர்வாராயினர். நமது சைவ இளைஞர்கள், இத்தகைய மாறுபாட்டுணர்ச்சிக்கிடனின்றி தக்கவழியினாய்ந்து உண்மையைத் தேர்ந்து வுலகிற் கறிவுறுத்தவேண்டுவது ஒருகடமையாகும். நமது சைவ சமயமோ கற்பகச்சோலை யொப்பத் தன்னைச் சார்ந்த பலதிறப்பட்ட ஆன்மாக்களும் அவரவர் தகுதிக்கேற்ப பயன்படும் பெற்றிவாய்ந்தது. பலபல வகையான கொடி செடி வகைகளையும், தளிரால், இலையால், அரும்பால், மலரால், காயால், கனியால், இன்னும் பலவகைகளால் பயன்படும் மரவகைகளையுமுடையது. இப்பலவகைச் செடிகொடி

மரங்களும் ஒன்றோடொன்று இடைமிடைந்து நெருங்கிஒன்றி லொன்று வேறு பிரித்து அறியவியலாவண்ணம் வளர்ந் துள்ளன. பல நிலைகளையும் நன்குணர்ந்தோரே இதனைஆராய வல்லார்.பயன் பெறுதற்கு எத்துணை எளியருமுரியரேயாவர். ஆவலும் அன்புமே பயனடைதற்கு வேண்டிய பண்புகளா கும். ஆராய்ச்சி செய்வோர்க்கு இவ்விரண்டோடு அளவிலாச் சமயவறிவும் இன்றியமையாததல்லவா? இவை வாய்க்கப்பெ றார் சைவச்சூழலுள் புகுந்து சுழன்றுவறிதே திரும்புவதன்றி என்செயவல்லார்? வாய்வந்தவாறு பிதற்றுவது இயற்கையே. சைவ இளைஞர்களே! நீவிர் ஆவலுந்த, அன்பு ஈர்ப்ப, அறிவு துணைகாட்ட, நமது கற்பகக்காவுட் சென்று, அங்கு காணப் பெறும் பலவகை மரஞ்செடிகொடிகளையும் வகைக்கொன்றாகக் கொணர்ந்து, எளிய அறிவினரும் கண்டுகளித்துப் பயனுறும் வண்ணம் தனித்தனியே பயிர்செய்து, இந்நிலவுலகில் ஓர் சைவச் சோலை தோற்றுவிப்பீர்களாயின், சமயவாராய்ச்சி செய்யும் இந்நிலவுலகம் அனைத்தும் ஓடோடியும் வந்து உங் கள் சோலையின் தளிர்கண்டு மகிழ்ந்தும், மலர் மோந்து நெகிழ்ந்தும், தென்றல்வீச அயர்ந்தும், குயில்கூவ உருகியும், கனியார்ந்து மெய்ம்மறந்தும் பேரின்புறுவர். நீவிரும் இறை வன் பணியில் ஒரு சிறிதாற்றினேம் என்னும் மகிழ்வெய்த லாம்.

நமது சமய தத்துவமாகிய சித்தாந்தமோ முதிர்ந்த நிலையுடைய தொன்றாகும். நமது பெரியோர் இவ்வுலகந் தோன்றி நின்று நிலவுவதைக் கண்டு இவ்வுலகுக்கும் அதன் கண்வாழுந் தமக்கும் தலைவன் ஒருவன் உளன் என்பதை யோர்ந்து அத்தலைவனைப் பதியெனவும், உயிர்த்தொகுதியைப் பசுவெனவும், இவ்விரண்டிற்கும் புறம்பாயுள்ள உலகமுதலிய தோற்றங்களைப் பாசமெனவும் வழங்குவாராயினர். எனவே சித்தாந்தத்தின் முதற்பொருள்கள் பதி, பசு, பாசம், என் னும் மூன்றுமாகும். இவையெக்காலத்தும் நிலைநிற்பன. ஒன் றிலிருந்து ஒன்று தோன்றியவையல்ல. பதியென்பது எல் லாம் வல்ல இறைவனைக் குறிக்குஞ்சொல். பசுவென்பது உயிர்த்தொகுதியைக் குறிக்குஞ்சொல். பசுக்கள் எண்ணிறந்

தன ; சிறு அறிவும் சிறு தொழிலுமுடையன. இறைவனுல் உணர்த்தப்பெறின் உணருந் தன்மையன. இயற்கையிலேயே பதியோடும் பாசத்தோடும் தொடர்புடையன. முன்னைய தொடர்பால் நல்வினையும், பின்னையதால் தீவினையும் இத் தொடர்புகளின் ஆற்றலின் ஏற்றத்தாழ்வால் நல்வினை தீவினைகளின் குறைவு மிகுதியும் இயற்கையிலேயே பசுக் களுக்கு ஏற்படடுள்ளன. பசு பளிங்குபோலச் சார்ந்ததன் வண்ணமாக நிற்கும். பாசமென்பது ஆன்மாக்கள் இறைவனை அறிய வொட்டாது மறைத்து நிற்கும் ஒரு பிணியாகும். செம்பிற் களிம்புபோல ஆன்மாக்களோடு கலந்துள்ளது. பதியின் அருள் நோக்கால் ஆன்மாக்களைப் பிணிக்கும் தன் ஆற்றல் குறையுந் தன்மையுடையது. இது ஆணவம், கன்மம், மாயை, என்னும் முத்திறத்தது. இவற்றை மும்மலமென்று கூறுவர். இவற்றுள் மாயை உயிர்கள் வாழுதற்கு இடமாக அமைந்துள்ளது. இதை முப்பத்தாறு பிரிவுகளாக ஒரு வகையில் பிரித்துள்ளார்கள். இப்பிரிவுகளுக்குத் தத்துவங்க ளென்று பெயர். அவை மண்முதல் ஒலிவரையிலாகும். இன் னும் பலவகைப் பிரிவுகளும் உண்டு. மக்களது அறிவும் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டது. அவை பாசத்தொடர் பான நிலைகளையும் இயக்கங்களையும் அறிந்துகொள்ளும் அறி வாகிய பாசஞானம் என்பதும், உயிரின் தன்மைகளை, அறிந்து கொள்ளும் பசு ஞானம் என்பதும், இறைவன் நிலையை யறிந்து உய்யும் பதிஞான என்பதுமாகும். ஒவ்வொரு ஞான மும் அவ்வவற்ளுேடு ஒன்றி உணர்ந்த நிலையிலேதான் முழுப்பயன் அளிக்க வல்லதாகும். பாசப் பிணிப்புண்டு கிடக்கும் உயிர்த்தொகுதிகள் ஈடேறும் வண்ணம் இறைவன் தனது சக்தியினுல் ஆற்றுகின்ற செயல், படைத்தல், காத் தல், அழித்தல், மறைத்தல், அருளல், என ஐந்து வகைப் படும். இவற்றையே இறைவனது ஐந்தொழில் எனக் கூறு வார்கள்.

(தொடரும்)



சைவ சித்தாந்த மகாசமாஜ

28-ஆம் ஆண்டு நிறைவு விழா

# சைவ மங்கையர் மகாநாட்டுத் தலைமைப் பேருரை

திருவளர்செல்வி. மாணிக்கவாசக சரோஜனியம்மையார்

அன்பார்ந்த சகோதரிகளே!

எனது தாழ்மையுள்ள வணக்கத்தை உங்களுக்குச் செலுத்திப் பேசத் தொடங்குகிறேன். சைவ சித்தாந்த மகாசமாசத்தார் இம்மகாநாட்டிற்கு என்னையொரு பொருட்டாயெண்ணித் தலைவியாகத் தேர்ந்தெடுத்தமை பற்றி எனது மனமார்ந்த நன்றியறிதலுடன்கூடிய வணக்கத்தை அவர்களுக்குச் செலுத்துவதுமன்றி, நான் பேசப்போகும் பொருள்களை ஆவலுடன் கேட்க இங்கே குழுமியிருக்கும் என் அன்புள்ள சகோதரிகளனைவர்க்கும் எனது வணக்கத்தைச் செலுத்துகின்றேன். அறிவிலோ, ஆற்றலிலோ, மற்றெவ்வகையிலோ தலைமை பூண்பதற்கேற்ற தகுதி சிறிதும் என்னிடமில்லை; ஏதோ சிறிதளவு பொதுவான கல்வியறிவு என்னிடமிருப்பினும் சமயக் கல்வியைப் பற்றி எனக்கு எதும் மிகுதியாகத் தெரியாது.

உலகில் எண்ணிறந்த சமயங்கள், எண்ணிறந்த சாதிகள், எண்ணிறந்த கலைகள், எண்ணிறந்த கடவுளர்கள், எண்ணிறந்த வழிபாடுகள் பரவியதனாலே மக்கள் வேற்றுமை உணர்ச்சி மேலிட்டு ஒவ்வொருவரும் தத்தம் மதமே சிறந்ததென்றும், தத்தம் சாதியே உயர்வானதென்றும், தாந்தாம் வழிபடுங் கடவுளே உண்மையானவரென்றும், தாந்தாஞ் செய்யும் வழிபாட்டு முறையே தக்கதாகுமென்றும் வழக்காடி வாயாடித் திரிகின்றார்கள். வேற்றுமை உணர்ச்சி மிஞ்ச மிஞ்ச, இவ்வுலகமானது பல்வேறு சமயக் கொள்கைகள் போராடும் போர்க்களமாகக் காணப்படுகின்றது. இதனி

டையே கடவுள் ஒருவர் இல்லையென்றும், உலகம் தோன்றியதும் நடைபெறுவதும் இயற்கை வழியே என்றும், கூக்குரலிடும் நாத்திகக் கொள்கையினரும் இப்போர்க்களத்தில் தம் திறமையைக் காட்டி வருகிறார்கள். நாம் ஒரு குழந்தையைப் பார்க்கும்போது, அதன் பெற்றோர்களைப் பாராவிடினும், அக்குழந்தையைப் பெற்றவர்கள் இருக்கவேண்டும் என்கிற எண்ணம் நமதுள்ளத்தில் தானாகவே எழப்பெறுகின்றோம். ஒவ்வொரு சிறுபொருளைக் காணும் போதும், ஒவ்வொரு புல்லிய நிகழ்ச்சியைப் பார்க்கும் போதும், அதைப்பற்றிக் கேள்விப்படும்போதும் அப்பொருளை உண்டுபண்ணியவர்யார்? அந்நிகழ்ச்சிக்குக் காரணமானவர் யார் ? என்கிற கேள்வி நம் மனத்திடை எழுவதுமன்றி வாயினின்றும் வெளியாகிறது. அப்படியே இப்பரந்த உலகத்தைக் காணும் போதும் இதை உண்டு பண்ணியவர் யாவர்? என்னும் ஆராய்ச்சியும் நமது உள்ளத்தில் எழாநிற்கின்றது. உலகமெங்கணும் ஒளி பரப்பும் ஞாயிறு, திங்கள், ஆழ்ந்தகன்ற கருங்கடல், நீலவானம் எண்ணிறந்த உயிர்த்தொகைகள் ஆகிய இவைகளையெல்லாம் உண்டு பண்ணியவர் சிறிய அறிவுஞ் சிறிய ஆற்றலும் உடையவராயிருத்தல் முடியுமோ? அறிவு மிகமிக ஆற்றலும் மிகுகின்றது. இவையெல்லாம் மக்கள் அறிவுக்கு மேம்பட்ட அறிவுடையவராலேயே உண்டு பண்ணப் பட்டிருக்க வேண்டும். அப்பேரறிவுடைய பேராற்றலுடைய பெரும் பொருளே கடவுள். கடவுள் என்றால் எல்லாவற்றையும் கடந்து நிற்பவர் என்று பொருள்படும். கடவுள் அறியாமை என்னும் இருளைக்கடந்து நிற்கும் உண்மைப்பொருள். மக்கட் கேற்படுந் துன்பங்கள் அவருக்கேற் படுவதில்லை. அன்பே அவருக்கு உயிர்; அருளே அவருக்கு உடல். "அன்பே சிவம்" "கருணையே வடிவமாகி" என்னும் பெரியோர் அருளிச்செய்த மொழிகளால் அதனை உணரலாம். ஒவ்வொரு சமயத்தினருந் தங்கள் மதத்தில் மட்டுமே கடவுள் இருக்கிறார்; மற்ற மதங்களில் கூறப்படுங் கடவுள் உண்மைக் கடவுள் அன்று என்று கூறுகிறார்கள். தாயுமானவர் "அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய்" என்று இறைவனை வாழ்த்தி யிருப்பதிலிருந்து ஆண்டவன் எங்கும்

நிறைந்த அறிவுப் பொருள் என்பது புலனாகின்றது. மக்கள் அனைவர்க்கும் ஒரே கடவுள்தான் இருக்கவேண்டு மென்பது தாயுமானவர் மற்றோரிடத்தில், "எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய், அங்கங்கிருப்பது நீ அன்றோ பராபரமே" என்று கூறியிருப்பதிலிருந்து விளங்குகின்றது. ஒவ்வொரு சமயத்தையும் தனித்தனியாக எடுத்து ஆராய்ந்தால், முடிவில் ஒரே உண்மையை அதாவது, எங்கும் நீக்கமற நிறைகின்ற கடவுள் ஒருவரே என்ற உண்மையை அதில் தெளிவாகக் காணலாம். "சாதி சமயங்களிலே வீதி பல வகுத்த சாத்திரக் குப்பைகளெல்லாம், பாத்திரமன்றெனவே அன்பாலின்றுண்மை நிலை அறிவிக்க அறிந்தேன்" என்று இராமலிங்க சுவாமிகள் அருளிச் செய்திருக்கின்றனர். கடவுள் ஒருவரே ஆயினும், வெவ்வேறு துறைகளில் முயற்சி செய்து அவரைப் பற்றிய உண்மையை அறிந்த நம் பெரியோர்கள் தத்தம் ஆராய்ச்சியிற் கண்ட முறைகளையே மதமென வகுத்தார்கள். நாம் ஒரு குறிப்பிட்ட இடத்திற்குச் செல்ல வேண்டுமானால், வழி அறியவிரும்பி மற்றவர்களிடம் கேட்கின்றோம். பலர் பலவழி கூறுகிறார்கள். எந்த வழியிற் சென்றாலும் குறிப்பிட்ட இடத்தைச் சேரலாம். ஆனால், எந்த வழி சுருக்கமாகவும், இடர்ப்பாடில்லாமலும் இருக்கின்றதோ அந்த வழியைப் பின்பற்றுவதே நமது கடமையாகும். அதுபோலவே, பல மதங்களின் மூலமாகவும் கடவுளை அறியலா மென்றாலும், எந்த மதத்தில் கூறப்படும் பொருள்கள் உண்மையானவை என்று புலப்படுகின்றனவோ அந்தப் பொருள் கொண்ட மதத்தில் பற்றுக்கொள்ள வேண்டியது நமது பெருங் கடமை. "பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப், பற்றுக பற்றுவிடற்கு" என்னும் திருவள்ளுவர் திருமொழிக் கேற்பப் பிறப்பிறப்பற்ற பெருமானதன் பெய்கழல்களைப் பற்றிக் கொண்டு, மற்றைப் பற்றுகளையும், மதச்செருக்கையும் விட்டொழித்தல் வேண்டும். அறியாமை இருளில் மூழ்கிக் கிடக்கும் மனத்தால் கடவுளை அறிவது இயலாது. மனம் ஓடுந்தன்மை யுடைத்து; அதை ஒருவழிப் படுத்தி நிறுத்துவதற்காகவே திருக்கோயில் வழிபாடு ஏற்படுத்தப்பட்டது. பலவழிகளில் மனதைச் செலுத்தாமல்

"ஒன்றைப்பிடி உறுதிப்பிடி" என்றபடி உயிர்களனைத் திற்கும் கடவுள் ஒருவரே என்றும், அவ்வொருவருக்கே வழிபாடு செய்தாலொழிய மனம்போனவாறு பல தெய்வ வணக்கம் செய்தல் கூடாதென்றும் நம்மாணிக்க வாசகப் பெருமானுர்,

"கொள்ளேன் புரந்தரன் மாலயன்வாழ்வு குடிகெடினும்
நள்ளேன்நினதடி யாரொடல் லால்நரகம் புகினும்,
எள்ளேன் திருவருளாலே இருக்கப்பெறின் இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லாதெங்கள் உத்தமனே"

என்று வற்புறுத்தி அருளிச் செய்திருக்கின்றூர்.

இனிச் சைவ சமயத்தைப்பற்றி ஆராய்வோம். சிவனைப் பற்றிக் கூறப்படும் மதம் சைவமதமாகும். சிவப்பு நிறமான வர் என்பதிலிருந்து கடவுளுக்குச் சிவன் என்று பெயர் வந்தது. அவர் சிவப்பானவர் என்பதற்கு நம் சைவசமய ஆசிரியரில் ஒருவரான திருநாவுக்கரசு நாயனுர் தனித் திருத் தாண்டகத்தில் "செம்பவள வண்ணர், செங்குன்ற வண்ணர், செவ்வான வண்ணர் என் சிந்தையாரே" "தீ வண்ணர் திறமொருகால் பேசாராகில்" என்றற்ருெடக்கத்துத் திரு மொழிகளில் அருளியிருத்தலே சான்ருகும். கடவுளுக்கு உருவம் உண்டா? எதுபோல் அவ்வுரு? மக்களுக்கு அவர் கட்புலனுகக் கூடியவரா? என்று ஆராய்ந்து பார்க்கின், அவ ருக்குத் தனிப்பட்ட ஓர் உருவம் இல்லை. பொதுவாக அவர் ஒளி வடிவானவர் என்பது திண்ணம். அறியாமை என்னும் இருளைக்கடந்து இறைவனையே இடையருது வழுத்தி, வணங்கி அருள்நிலை அடைந்த பெரியோர் சிலர்க்கு அவர் தம் திருவுருவத்தைப் பார்க்கும் பேறு கிடைத்தது; அவ்வாறு பெரும்பேறு பெற்றவர்களிற் சிறந்தவரான திருஞான சம் பந்த மூர்த்தி நாயனுரும், திருநாவுக்கரசு நாயனுரும், மாணிக்கவாசகப் பெருமானும், சுந்தரரும், அவர் திருவுரு வத்தைக் கண்டவராவர்; அவர்கள் இறைவன் திருவுரு வினைக் கண்டுபாடிய பாடல்களில் போதிய அகச்சான்றுகள் உள்ளனவென்பதை எவரும் மறுக்க முடியாது.

(தொடரும்)

# சைவர் மகாநாட்டுத் தீர்மானங்கள்

1. ஆதிதிராவிடர் உள்ளிட்ட இந்துக்கள் அனைவர்க்கும் சைவத் திருக்கோயில்களுக்குள் சென்று வணங்கும் உரிமை உண்டென்ற கொள்கை சைவசமயத்திற்கு உடன்பாடென்று இம்மகாநாடு கருதுகின்றது.

2. சிவதீக்கை பெறுதல் முதலிய சமய உரிமைகள் ஆதிதிராவிடர் உள்ளிட்ட சைவசமயிகள் அனைவர்க்கும் உண்டென்று இம்மகாநாடு கருதுகின்றது.

3. இந்துக்களில் சில வகுப்பினர் சைவத் திருக்கோயில்களில் சென்று வழிபடும் உரிமை இல்லாதிருப்பது சைவசமயத்திற்கு ஊறு விளைப்பதாக இருத்தலால் அவர்கள் அவ்வுரிமை பெறுதற்குச் சைவர்கள் அனைவரும் ஆதரவு அளிக்கும்படி இம்மகாநாடு வேண்டிக்கொள்கிறது.

இத்தீர்மானத்தை மகாத்மாகாந்திக்கும், அரசினர்க்கும், மாகாண ஹரிஜன ஊழிய சங்கம், தலைமை ஹரிஜன ஊழிய சங்கம், திருவாளர்கள் இராவ்பகதூர் எம், சி ராஜா, சி. எஸ். அரங்கய்யர் (இந்திய சட்டசபை உறுப்பினர்) முதலியவர்கட்கும் அனுப்பிவைக்கும்படி காரியதரிசி அவர்களை இம்மகாநாடு கேட்டுக்கொள்ளுகிறது.

4. (1) இளைஞர்கள் சைவசமய நூல்களைக் கற்பதில் ஊக்கம் உண்டாகும் பொருட்டு இச்சமாஜத்தார் ஆண்டுதோறும் சைவநூல்களில் தேர்வுகள் நடத்தி, தேர்ச்சிபெறுபவர்களுக்குத் தகுதிச் சீட்டுகளும், பரிசுகளும் அளிக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

(2) இதற்கு வேண்டிய பாடதிட்டங்களையும் விதிகளையும் ஏற்படுத்துவதற்கு:—

(1) தலைவர்

(2) காரியதரிசி

(3) திரு. சாமிவேலாயுதம் பிள்ளை ஆகிய மூவர் சேர்ந்த உட்கழகத்தை இம்மகாநாடு ஏற்படுத்துகிறது.

(3) பரிசளிக்க திரு - சாமி வேலாயுதம்பிள்ளை நன்கொடையாகக் கொடுக்கிற ஐம்பது ரூபாயை இம்மகாநாடு நன்றியுடன் ஏற்றுக்கொள்ளுகிறது.

5. (1) சைவப் பெரியார்களின் திருவுருவப் படங்களை அழகிய முறையில் பதிப்பித்து வெளியிடல் வேண்டுமென்று இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

(2) இதற்கு வேண்டிய செலவுகளுக்காகத் திரு. சாமிவேலாயுதம்பிள்ளை கொடுக்கிற ஐம்பது ரூபாயையும் இம்மகாநாடு நன்றியுடன் ஏற்றுக்கொள்ளுகிறது.

6. ஆங்கிலப் பேராசிரியராகிய H. G. Wells என்பவர் எழுதியிருக்கிற "உலக சரித்திரம்" என்னும் நூலில் சைவம், தமிழ் ஒன்றைப் பற்றியாவது ஒரு குறிப்பாவது இல்லாதிருப்பது வருந்தத்தக்கது ஆகையால் ஷெ ஆசிரியருக்கு இதைப்பற்றி வற்புறுத்தி எழுதக் கீழ்க்காணும் உட்கழகத்தை இம்மகாநாடு ஏற்படுத்துகிறது.

திரு. சீ. கந்தசாமிபிள்ளை அவர்கள், M. R. A. S. (கூட்டுவிப்போர்)
,, ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T.
,, கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M. A., M. L.
,, ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள், B. A., B, L.
,, ந. மு. கோவிந்தசாமி நாட்டாரவர்கள், B. A., L. T.

7. பலவான்குடி திரு ராம. கு. ராம. இராமசாமி செட்டியார் அவர்கள், தென்குடித்திட்டையில் சைவகலாசாலை கட்டத் தொடங்கி இருப்பதை இம்மகாநாடு பாராட்டுவதுடன் அப்பணியை விரைவில் முடித்துக் கலாசாலை வேலையைத் தொடங்க ஏற்பாடு செய்யும்படி இம்மகாநாடு அவர்களை வேண்டிக்கொள்கின்றது.

8. சைவசாத்திரப் பயிற்சிக்கும், பிரசாரத்திற்கும் நிறுவப்பெற்றுள்ள தேவகோட்டை சிவாகம சங்கம், சிதம்பரம் மெய்கண்ட வித்தியாசாலை முதலிய நிலையங்கள், பொருளிருந்தும் பணிகளைச் செய்யாதிருப்பதால் அவற்றின் பாதுகாப்பாளர்கள் அவை மேற்கொண்ட பணிகளைத் தொடர்ந்து நிறைவேற்ற வேண்டுமென்று இம்மகாநாடு வேண்டிக்கொள்கிறது. அவர்களால் முடியாவிடின் ஷெ நிலையங்களின் நோக்கங்களுடைய பிற சைவ நிலையங்களின் வாயிலாகவோ மற்றும் தக்க பிற வழிகளாலோ மேற்கண்ட சைவப் பணிகளை இடையீடின்றி நடத்திவர ஏற்பாடு செய்யும்படி இம்மகாநாடு அந்நிலையப் பாதுகாப்பாளர்களை வேண்டிக்கொள்கின்றது.

9. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் இசைப் பகுதியில் (Musical Section) தேவாரம் முதலிய தமிழிசைப் பாட்டுகளைச் சிறப்பாகச் சொல்லிக்கொள்ளும்படிக்கும் சித்தாந்த வகுப்பு (Siddanta Chair) ஒன்றை ஏற்படுத்திச் சைவ சித்தாந்தத்தைப்பற்றி ஆராய்ச்சி, தேர்வு, கற்பித்தல், முதலியவற்றிற்கான ஏற்பாடுகளைச் செய்யும்படிக்கும் இம்மகாநாடு கேட்டுக்கொள்கின்றது.

10. கோயில்களின் திருமதில்களுக்குள் யாராயிருப்பினும் செருப்பு முதலியன அணிந்து செல்வது ஒழுங்கீனமாதலின் அதனைத் தடுக்

கும்படி கோயிலதிகாரிகளையும் பொது ஜனங்களையும் இம்மகாநாடு கேட்டுக்கொள்கின்றது.

11. ஒவ்வொரு சைவ உத்தியோகஸ்தரும், மிராசுதாரரும் வியாபாரியும் தமது வரும்படியில் ஒரு சிறு பகுதியையேனும் மாதந்தோறும் தவறாது (அல்லது ஆண்டிற் கொருமுறை மொத்தமாக) இச் சமாஜத்திற்கென உதவும்படி வேண்டிக் கொள்ளப்படுகின்றனர்.

12. சிவஸ்தலயாத்திரை சமய வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிவதாதலால் அதனைச் சைவசமயிகள் பலரும் அன்புடன் மேற்கொண்டு கூட்டங்கூட்டமாக யாத்திரைசெய்தல் நலமென்று இம்மகாநாடு கருதுகின்றது.

13. சிவாலயங்களில் போதிய ஊதியந் தந்து பிரசாரகர்களை நியமித்து முறையாகப் பிரசாரம் செய்யும்படி இம்மகாநாடு கோயிலதிகாரிகளை வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறது.



# சைவ இளைஞர் மகாநாட்டுத் தீர்மானங்கள்

1. சைவ சமயத்தைத் தாய்ச்சமயமாகக்கொண்டுள்ள ஆதித்திராவிடர்கள் உள்ளிட்ட எல்லா வகுப்பார்க்கும் திருக்கோயிலில் நுழையும் உரிமை உண்டென்றும் அது சைவ சமயத்திற்கு முற்றிலும் உடன்பாடென்றும், அதற்காகச் சைவ இளைஞர்களையும், பெரியார்களையும் உழைக்குமாறும் இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது. இத் துறையில் உலகம் போற்றத் திருப்பணி ஆற்றி வரும் காந்தியடிகட்கு இம்மகாநாடு தன் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறது. இத்தீர்மானத்தைக் காந்தியடிகட்குத் தெரிவிக்குமாறும் இம் மகாநாடு சமாசக்காரியதரிசியாரைக் கேட்டுக் கொள்கிறது.

2. சைவ நன்மக்கள் ஏற்படுத்தியுள்ள மாணவர் விடுதி போன்ற அறநிலையங்களும், பிற கொடைப் பொருள்களும், சைவசமயத்தை வளர்க்கக்கூடிய வழியிலேயே சைவசமயிகட்கே பயன்படுமாறு நடத்திவர வேண்டுமென்றும், அக்கொடையாளர்களையும், அதிகாரிகளையும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கின்றது.

3. வெளிநாடுகளில் நடக்க இருக்கின்ற நெறிப்பாராளுமன்றங்களிலும், (Parliament of religions) பிறமன்றங்களிலும் நம் சைவ சமயக் கொள்கைகளை உலகமறிய வெளியிட வேண்டியது நம்முதற்

பெருங் கடமையாதலின், செந்தமிழும், ஆங்கிலமும், வடமொழியும் ஒருங்கே கற்றுத்துறைபோய உயர்திரு மறைமலையடிகள் (சாமி வேதாசலம்) போன்றாரை அவர் தமக்கு வேண்டிய உதவிகளுடன் அனுப்பி வைத்து சைவப் பணியாற்றுமாறு பெருஞ் செல்வர்களையும், சைவ அன்பர்களையும் இம்மகாநாடு வற்புறுத்தி மிகவும் வேண்டிக்கொள்கிறது.

4. சைவத் திருக்கோயில்களில் ஆதிசைவர்கள் அல்லாத ஏனைய பார்ப்பனர்கள் திருமேனியைத் தீண்டுதலும், பூசை முதலிய செய்தலும் கூடாதென்றும், ஏனைய பணியாளர்களும் சைவர்களாகவே இருந்தாலன்றி, அன்புடன் பணிசெய்யப்படுதல் இயலாதென்றும் இம்மகாநாடு தெரிவித்துக் கொள்கின்றது.

5. சைவத் திருமடங்களில் நிகழும் ஆடம்பரச் செலவுகள் பலவும், வீணான வழிகளில் செலவழிப்பதை அறவே நிறுத்துமாறும் மேற்படி ஆடம்பரச் செலவிற்காகும் பொருள்களை யெல்லாம் சைவ சமய வளர்ச்சிக்கே செலவிடுமாறும் சைவ மடாதிபதிகளை இம்மகாநாடு வேண்டிக்கொள்கின்றது. இத்தீர்மானத்தை அவர்களுக்குத் தெரிவிக்குமாறு ச்மாசகாரியதரிசியைக் கேட்டுக் கொள்கிறது.

6. சைவசமய வளர்ச்சிக்கு ஆதரவான நூல்களை யாவரும் அறிய் எளிய தனித்தமிழ் நடையில் எளிய விலைக்கு வெளியிடுமாறு சைவப் புலவர்களை இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது.

7. நமது நெறியின் உயிர்நிலைகளாகிய சக்கராப்பள்ளி, திருநீடூர் முதலிய பல கோயில்கட்கு தீங்கு செய்யாமலும் சைவரின் உள்ளத்தை உறுத்தாமலும் இருக்கும்படி பிறமதத்தினரையும், அக் கோயில்களைப் போற்றிப் பாதுகாத்துஆவனபுரிந்துவர அவ்வூரார்களையும், சைவப் பெரியார்களையும், அறநிலையப் பாதுகாப்பாளர்களையும் இம்மகாநாடு வேண்டிக் கொள்கின்றது.

8. திருவையாற்று அரசர் கல்லூரி வித்வான் இரண்டாவது வகுப்புச் சைவமாணவர் திரு. S. நடராசனைக் குற்றம் ஒன்றும் இன்றி அக்கல்லூரிப் பிரின்ஸிபால் ஐம்பதுக்கு மேற்பட்ட அடிகளை பிரம்பினலடித்து, மறு உத்திரவு வரையில் அம்மாணவரைக் கல்லூரியிலிருந்தும், சாப்பாட்டு விடுதியிலிருந்தும் நீக்கியதை இம்மகாநாடு கண்டிக்கின்றது. அதோடு இதைத் தீர விசாரணை செய்து முறை வழங்கும்படியாக இம்மகாநாடு தஞ்சை மகாநாட்டாண்மைக் கழகத் தலைவரை வேண்டிக் கொள்கிறது.

சைவ மங்கையர் மகாநாட்டில் ஆதிதிராவிடருள்ளிட்டோரின் திருக்கோயில் நுழைவை யாதரித்தும், புலால் உணவை நீக்கவேண்டுமென்றும் சமயப்பணிகளைச் செய்யவேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

" எவ்வுயிரும் நீங்காதுறையும் இறைசிவனென்று
எவ்வுயிர்க்கும் அன்பா யிரு "

# சைவ சித்தாந்த மகா சமாஜத்தின்

# 28-ம் ஆண்டு அறிக்கை

### சமாஜம் நிறுவப்பெற்ற காலம்

இச்சமாஜம் சைவசித்தாந்த சமயத்தையும் அதன் தத்துவ சாத்திர முடிபுகளையும் எல்லோருக்கும் எளிதில் விளக்கும்பொருட்டு 1905ௗ ஜூலை மீ 7௨ நிறுவப்பெற்றது.

### சமாஜக் காரியாலயம்

இது தற்போது சென்னை, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு 150-வது எண்ணுள்ள இல்லத்திலுள்ளது.

### உறுப்பினர் தொகுதி

இவ்வாண்டின் தொடக்கத்தில் சமாஜ உறுப்பினர் தொகுதி 490 ஆகவும், இறுதியில் 410 ஆகவும் இருக்கிறது. நாளுக்குநாள் குறையாமல் அதிகரித்து உறுப்பினர் தொகுதியை வளரச் செய்வது சமாஜப் பணியாளர்கள் முதற் கடமையாகும்.

### இணைக்கப்பெற்ற சைவ சபைகள்

இவ்வாண்டில் கீழே குறிக்கப்பட்டுள்ள பதினைந்து சைவ சபைகள் நமது சமாஜத்தோடு இணைக்கப்பெற்றுள்ளன :—

1. தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கம், திருநெல்வேலி.
2. சைவ சித்தாந்த சபை, தஞ்சாவூர்.

3. சைவ சித்தாந்த சபை திரிசிராப்பள்ளி.
4. ஷை தூத்துக்குடி.
5. ஷை ஸ்ரீ வில்லிபுத்தூர்.
6. ஷை சமாஜம், மதுரை.
7. கந்தனடியார் திருக்கூட்டம், சிற்றூர்.
8. ஸ்ரீ சண்முக பக்த சமாஜம், சிற்றூர்.
9. ஸ்ரீ சண்முக சன்மார்க்க சபை, திருநீலகண்டபுரம், இராயப்பேட்டை.
10. ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபை, இராயப்பேட்டை.
11. ஸ்ரீ இராமலிங்க அடிகள் திருவருட் கழகம், கண்டியூர்.
12. சமரச வேத சன்மார்க்க சங்கம், அரசூர், பெங்களூர்.
13. வாலாஜாநகர் திருக்குறள் கழகம், வாலாஜாநகர்.
14. சென்னை வேதாகமோக்த சைவசித்தாந்த சபை, புரசபாக்கம்.
15. ஸ்ரீ காரணீசுவரர் தமிழ் வேத பாராயண பக்தஜன சபை, சைதாப்பேட்டை.

இச்சபைகளின் ஆண்டு விழாக்கள் சிறப்புக் கூட்டங்கள் முதலியன பற்றிய செய்திகள் அவ்வப்போது "சித்தாந்தம்" வாயிலாக வெளி வந்துள்ளன. இச்சபைகளைப்போலவே நமது நாட்டிலுள்ள நூற்றுக்கணக்கான ஏனைய சைவ சபைகளும் நமது சமாஜத்தோடு ஒத்துழைக்க முன்வந்தால் சமயத் தொண்டு மிகச் சிறப்பாக நடைபெறும்.

### காரியநிர்வாக சபை

இச்சபையின் கூட்டங்கள் பத்து இவ்வாண்டில் நடைபெற்றன.

### பொதுக் கூட்டங்கள்

இவ்வாண்டில் ஆண்டுவிழா ஒன்றும் பொதுக் கூட்டங்கள் இருபத்து மூன்றும் நடைபெற்றன. இவற்றுள் ஒன்று சமாஜத்தின் காரியக் கூட்டமாகும். ஏனைய இருபத்திரண்டும் தமிழ் நாட்டின் பல பகுதிகளில் சமய போதனை செய்வதற்காகவே பெரும்பாலும் கூட்டப் பட்டன. இவற்றுள் ஒன்று திருவண்ணாமலையிலும், மூன்று

திருநாவலூரிலும், ஒன்று திருவாலங் காட்டிலும், ஒன்று திருநாரையூரிலும், ஒன்று பண்ணுருட்டியிலும், ஒன்று திருவெண்ணெய்நல்லூரிலும், ஏனைய பதினான்கு சென்னையிலும் நடைபெற்றன. இவைகளின் நடைமுறை விவரங்களெல்லாம் அவ்வப்போது "சித்தாந்தத்தில்" வெளியிடப்பட்டன.

## சாத்திர வகுப்புக்கள்

இவ்வாண்டின் தொடக்கத்தில் திரு - மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி. ஏ. அவர்கள் "சிவஞானபோதம்" வகுப்பை நடாத்தி முடித்தார்கள். இவ்வாண்டின் இறுதியில் திரு. அ. கந்தசாமி பிள்ளையவர்கள் "திருவருட்பயன்" வகுப்பைத் தொடங்கி முறையாக நடத்தி வருகின்றார்கள். இவ்விரு பெரியார்கட்கும் சமாஜத்தின் நன்றி பெரிதும் உரித்து.

## திருமுறை வெளியீடு

தேவாரம் முதலிய பன்னிரு திருமுறைகளையும் ஆயிரக் கணக்கில் அச்சிட்டு அடக்க விலைக்குத் தரவேண்டுமென்ற நோக்கத்தோடு சென்ற நாலாண்டுகளில் முறையே சுந்தரர் தேவாரம், அப்பர் தேவாரம், சம்பந்தர் தேவாரம், திருவாசகம் திருக்கோவையார் திருவிசைப்பா திருப்பல்லாண்டு ஆகிய ஒன்பது திருமுறைகளை வெளியிட்ட நன்முறையைப் பின்பற்றி இவ்வாண்டில் திருமூலர் திருமந்திரமாகிய பத்தாந் திருமுறையும், நாற்பது திவ்ய பிரபந்தங்க ளடங்கிய பதினொராந் திருமுறையும் அடக்கவிலை சுத்தப் பதிப்புக்களாக வெளியிடப்பட்டன. இவ்வெளியீடுகட்காகப் பெரிதும் உழைத்து, பல ஏட்டுப் பிரதிகளைப் பரிசோதித்து, அச்சுத் தாள்களைத் திருத்தி உபகரித்த தொண்டர்கட்கு நமது சமாஜம் நன்றி செலுத்துகின்றது.

## சில உரை வெளியீடுகள்

திருவாசகம் முழுமைக்கும் ஒரு புத்துரை திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ., எம். எல். அவர்களால் எழுதப்பெற்று, திருவாளர்கள் - பண்டிதமணி - மு. கதிரேசச் செட்டியார், இவண் தலைமை பூண்டொழுகும் பெரியார் ந. மு. வேங்கடசாமி நாட்டார், அ. மு. சரவண முதலியார் ஆகிய மூன்று பேரறிஞர்களாற் பரிசோதிக்கப்

பெற்று, இவ்வாண்டில் தனிப்புத்தகமாக வெளிவந்துள்ளது. நாடோறும் பாராயணம் செய்வதற்குரிய திருமுருகாற்றுப்படைக்கு எளிய தமிழ் நடையில் அரியவுரை ஒன்றும் வெளியிடப்பட்டது. உமாபதி சிவாசாரியார், மூவர்தேவாரத்திலிருந்து திரட்டிய தொண்ணூற்றொன்பது பாடல்கட்கும் பதவுரையும் மிக விரிவான விளக்கவுரையும் இவ்வாண்டில் திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி. ஏ. அவர்களால் எழுதி முடிக்கப்பெற்று, தனி நூலாகவும் வெளியிடப் பட்டுள்ளது. இவ்வுரை, வெளியீடுகட்குத் துணைபுரிந்த பெரியார்கட்கெல்லாம் நமது சமாஜத்தின் மறவா நன்றி என்றும் உரித்தாகும்.

### "சித்தாந்தம்" பத்திரிகை

இது இயன்றவரையில் நல்லமுறையில் நடைபெற்று வருகிறது. உமாபதிசிவம் திருமுறைத் திரட்டு உரை, திருவாசக உரை, திருவகுப்பு உரை முதலிய உரையீடுகளும் "சித்தாந்த சாரம்," "அத்துவித சாரம்" முதலிய அரிய நூல்களின் மூலமும், சொற்பொழிவுக் குறிப்புகள், கல்வெட்டுகள், சம்பந்தர் தேவாரப் பதிக அமைப்பின் ஆராய்ச்சி முதலிய பல செம்பொருள்களும் இவ்வாண்டில் வெளிவந்துள்ளன. இவைகளையும் ஏனைய கட்டுரைகளையும் எழுதியுபகரித்த பெரியார்கட்கெல்லாம் சமாஜம் நன்றி கூறுகின்றது.

### வரவு செலவுக் கணக்கு

இவ்வாண்டின் வரவு செலவுக் கணக்கு 1932ஆ டிசம்பர்மீ 1உ முதல் 1933ஆ நவம்பர்மீ 30உ வரை நிகழ்ந்த நடவடிக்கைகளின் வரவு செலவுக் குறிப்புக்களாகும். இவைகளைச் செம்மையாக வைத்து வந்த திரு. தி. க. சுந்தரம்பிள்ளையவர்கட்கும், மாதந்தோறும் கணக்குகளைப்பரிசோதித்து உபகரித்த திரு. கி. குப்புச்சாமி முதலியாரவர்கட்கும், ஆண்டுக் கணக்கைப் பரிசோதித்து உதவிய திரு. ஈ. ந. தணிகாசல முதலியார், பி. ஏ., பி. எல். அவர்கட்கும் சமாஜத்தின் நன்றி பெரிதும் உரித்து. இவ்வாண்டின் வரவு செலவுத் தொகுப்பேட்டை இவ்வறிக்கையின் இறுதியிற் காண்க.

### நன்றி கூறல்

திருவண்ணாமலை, திருநாவலூர், திருவாலங்காடு, திருநாரையூர், பண்ணுருட்டி, திருவெண்ணெய் நல்லூர் முதலிய பல தலங்களில்

சமாஜக் கூட்டங்களைச் செம்மையாக நடத்திவைத்த அன்பர்கட்கும், சமாஜப்பொதுக் கூட்டங்கள் வகுப்புகள் முதலியன நடத்தற்கு அவ்வப்போது இடம் முதலிய வசதிகளை நல்கும் இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையினருக்கும், காரியதரிசி பத்திராசிரியர் உதவிக் காரியதரிசி உதவிப் பத்திராசிரியர் பொருட்காப்பாளர் கணிதபரிசோதகர் முதலிய உத்தியோகஸ்தர் கட்கும், சமாஜ வெளியீடுகளை விற்று முதல் செய்யத் துணைபுரியும் தொண்டர்கட்கும், சமாஜ வெளியீடுகளையும் 'சித்தாந்தம்' பத்திரிகையையும் மிகச் செவ்வையாக அச்சிட்டு உரிய காலங்களில் வெளியிடுதற்குப் பெரிதும் துணைபுரிந்த சாது அச்சுக்கூடத்தினருக்கும், சமாஜப் பணிகளை ஊக்கத்துடன் நடத்திய ஏனைய பல அன்பர்கட்கும் சமாஜம் மனமார்ந்த நன்றி கூறுகின்றது.

## வேண்டுகோள்

பன்னிரு திருமுறைகளுள் பதினொன்று சமாஜப் பதிப்புக்களாக வெளிவந்து விட்டன. பன்னிரண்டாம் திருமுறையாகிய பெரிய புராணத்தில் முக்காற்பங்கு அச்சாகி முடிந்திருக்கிறது. அடுத்த சேக்கிழார் திருநக்ஷத்திரத்தன்று நூல் வெளிவருதல் கூடும். பதினான்கு சாத்திரங்களுள் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார் பரபக்கம் ஆகிய இவை மூலமும் உரையுமாக அச்சிட்டு முடிந்துள்ளன. சித்தியார் சுபக்கமும் ஏனைய நூல்களும் மூலமும் உரையுமாக விரைவில் அச்சாகி வரும். அடுத்த ஆண்டின் இறுதிக்குள் பதினான்கு சாத்திரங்களும் மூலமும் உரையுமாக வெளிவருதல் கூடும். இனித் திருப்புகழ், கந்தரநுபூதி முதலிய அருள் வாக்குகள் அடக்கவிலைச் சுத்தப் பதிப்புக்களாக வெளிவர வேண்டும். 'சித்தாந்தம்' பத்திரிகைக்கு சந்தாதார்கள் பெருகவேண்டும். அரியபொருள்களை எளியநடையில் சுருக்கமாக எழுதித்தருவோர் வேண்டும். சமாஜத்தினர் ஒவ்வொருவரும் உண்மையாக சமாஜ வளர்ச்சியைக் கருதினால் இதுமுதல் ஒரு மாதத்துக்குள் ஒரு புதிய சந்தாதாரரையாவது சேர்த்துத் தருவதாக இறைவன் திருமுன்பு உறுதி செய்துகொண்டு அவ்வாறே உதவிபுரிய வேண்டும். மேன்மேலும் இச்சமாஜத்தின் அரிய நோக்கங்களை ஈடேற்றுவ

தற்கும், சமய முன்னேற்றத்துக்குரிய சமயச் சீர்திருத்தம், ஆலயச் சீர்திருத்தம், மடாலயச் சீர்திருத்தம் முதலியவற்றிற்காகச் செவ்வனே உழைப்பதற்கும், "சித்தாந்தம்" பத்திரிகை மிகவும் சிறப்பாக நடைபெறுவதற்கும், ஆயிரக்கணக்கான வகையில் பன்னிருதிருமுறைகளும் பதினான்குசாத்திரங்களும் தமிழ் நாடெங்கும் பரவுவதற்கும், சைவ சமயத்தை உலகெங்கும் உண்மையில் மிளிரச் செய்வதற்கும், சைவ நன்மக்கள் திரண்டு முன்வந்து பெரும்பொருள் கொடுத்து சமாஜத்திற்கு உதவிபுரியுமாறு எல்லாம் வல்ல இறைவன் திருவருள் பாலிக்க அவன் திருவடிகளை வழுத்துகின்றோம்.

இங்ஙனம் : உத்தரவின்படி,

13-12-1933. ம. பாலசுப்பிரமணியன்,

காரியதரிசி.

---

## ஐ ய வி ன

திருக்குற்றாலமலைக் கோவையின் நூலாசிரியர் யாவர்? அதற்கு உரையுண்டா? அதனை முன்னர் யாவரேனும் அச்சிட்டிருக்கின்றார்களா? இவ்வினாக்களிற் குறித்த செய்திகள் ஐயுறவுக்கிடமாயிருத்தலின், தெரிந்த அன்பர்கள் இப்பத்திரிகை மூலம் அறிவிக்க வேண்டுகிறேன்.

ஆ. வே. திருமுருகநாத பிள்ளை,

*Retired Assistant Director of Agriculture,*

*Erode.*

# சமாஜ 28-ம் ஆண்டு விழா

(காரியதரிசி)

இவ்விழாவும் இதையொட்டிய சைவர் மகாநாடு, சைவ இளைஞர் மகாநாடு,சைவமங்கையர்மகாநாடுகளும் தஞ்சாவூர் கருந்திட்டைக்குடி கரந்தைத் தமிழ்ச்சங்கப் பேரவைக்களத்தில் மிகச்சிறப்பாகவும் ஒழுங்கான முறையிலும் 1933ஞு டிசம்பர்மீ 29உ வெள்ளிக்கிழமை முதல் மூன்று நாட்கள் அடியிற் காணும் விவரப்படிநடைபெற்றன.

முதல் நாள் மாலை 3-மணிக்கு மகாநாட்டுத் தலைவர் சைவத் திருவாளர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் திருமுறை முழக்கத்தோடு,தொண்டர்குழாம்புடைசூழ ஊர்வலமாக அழைத்துவரப்பெற்று அவைக்களத்தை யடைந்தார்கள். கடவுள் வணக்கம் முடிந்தவுடன், தஞ்சை நாட்டாண்மைக் கழகத் தலைவரும், சென்னைச் சட்டசபை உறுப்பினருமாகிய திரு. வயி - நாடிமுத்துப்பிள்ளையவர்கள் வரவேற்புக்கழகத்தலைவர் என்ற முறையில் தலைவரை வரவேற்றுத் தலைமை வகிக்குமாறு முன் மொழிந்தார்கள். அவ்வாறு மொழியுங்கால் சைவ சமயத்தைப் பாராட்டித் திருக்கோயில் மடாலயம் முதலியவைகளைச் சீர்திருத்தவேண்டிய அவசியத்தை மிக்க ஆர்வத்தோடு வற்புறுத்தினார்கள். பிறகு திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் தலைவருடைய கல்விச்சிறப்பு, தொண்டின் மேன்மை முதலியவற்றைப் பாராட்டிச் சமய வளர்ச்சிக்குரிய வழிகளையும் விவரித்துக் கூறிப் பின் மொழிந்தார்கள். பிறகு திரு. த. பா. சிவகுருநாத பிள்ளையவர்கள் சமாஜத்தின் பணிகளைப் பாராட்டி வழி மொழிந்தார்கள். அவையினர் அரநாம முழக்கம் செய்யத் தலைவரவர்கள் தலைமைத்தானத்தில் அமர்ந்தார்கள். பிறகு வரவேற்புப் பத்திரம் வாசித்து வழங்கப்பட்டது. பிறகு சமாஜத்தின் 28 ம் ஆண்டு அறிக்கைப் பத்திரம் கணக்குத் தொகுப்பேடு, ஆண்டுக்கணித பரிசோதகர் அறிக்கைகள் வாசிக்கப்பட்டு அங்கீகரிக்கப் பெற்றன.பிறகுதலைவரவர்கள் தமதுதலைமைப்பேருரையை நிகழ்த்தினார்கள். (இதனைமற்றோரிடத்திற்காண்க.)

பிறகு, உயர்திருவாளர்கள் - திருவையாறு சிதம்பர சுவாமிகள், தூத்துக்குடி - ந. சிவகுருநாதபிள்ளை, சென்னை - அ. சோமசுந்தரம் செட்டியார் எம். ஏ., விருத்தாசலம் வித்வான் பெரியசாமிப் பிள்ளை, தஞ்சை - பா. சிவகுருநாத பிள்ளை ஆகிய ஐந்து பேரறிஞர்கள் முறையே சங்கத்தின் பயன், சித்தாந்தசாரம், பன்னிரு திருமுறைச் சிறப்பு, மாணிக்கவாசகர், காணியரைக்காணி என்னும் செம்பொருள் கள்பற்றி மிகத் திறமையாகச் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் பலவற்றை விளக்கி அவையினர் வியக்கும் உயரிய முறையில் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். பிறகு தலைவர் கருத்துரையும் கடவுள் வாழ்த்தும் முடிந்து முதல்நாள் நிகழ்ச்சி முற்றுப்பெற்றது.

இரண்டாம்நாள் காலை இளைஞர் மகாநாட்டுத் தலைவர் திருமுறை முழக்கத்துடன் ஊர்வலமாக வரவேற்கப்பட்டனர். பின்னர்

பலர் முன்மொழி, பின்மொழி, வழிமொழி, வரவேற்பு முதலியன கூறத் தலைவர் (திரு - நீ. கந்தசாமிப் பிள்ளையவர்கள்) தலைமையி விருந்து தமது தலைமையுரையை நிகழ்த்தினார்கள். (இதனை மற்றோ ரிடத்திற் காண்க.) பின்னர் பல சைவ இளைஞர்கள் சிறந்த சொற் பொழிவுகளை நிகழ்த்தினார்கள். பிறகு பல தீர்மானங்கள் நிறை வேறின. தலைவர் கருத்துரை முடிபுரைகளும் வந்தனை கூறலும் நிகழ்ந்த பின்னர் இளைஞர் மகாநாடு நிறைவெய்திற்று.

அன்று பிற்பகலில் சைவ மங்கையர் மகாநாடு திருவளர்செல்வி - மாணிக்கவாசக சரோஜனி யம்மையார் தலைமையில் கூடிற்று. (தலைமை யுரையை மற்றோரிடத்திற் காண்க)- சில சொற்பொழிவுகள் நடந் தன. இதிலும் சில தீர்மானங்கள் நிறைவேறின. பிறகு மாலை 4 மணிக்குத் திரு - ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் தலைமையில் சைவர் மகாநாடு கூடிற்று. உயர்திருவாளர்கள் - தி. கு. சோமசுந்தரதேசிகர், பு. சமரபுரி முதலியார், மறை திருநாவுக் கரசர், அமிர்தலிங்கம்பிள்ளை, ச. சச்சிதாநந்தம் பிள்ளை ஆகிய ஐந்து பேரறிஞர்கள் முறையே தீமையின் உள்ளீடு நன்மையே, திருக் கோவையார், திருவெம்பாவை, ஞானசம்பந்தர் நற்றமிழ், சமயப் பாது காப்பு என்பனபற்றி மிகச் செம்மையாகவும் அவையினர் வியக்கத் தக்க உயரிய முறையிலும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். பின் னர் தலைவர் கருத்துரை கடவுள் வாழ்த்துமுற்றுப் பெற்று இரண் டாம் நாள் நிகழ்ச்சிகள் முடிவடைந்தன.

மூன்றாம் நாள் காலையில் காரியக்கூட்டமும், தீர்மானங்கள் நிறைவேற்றலும், உத்தியோகஸ்தர்கள் தேர்தலும் நடந்தன. இத் தேர்தல் விவரங்கள் அடுத்த இதழில் வெளிவரும். மாலை 3-மணிக்கு மீண்டும் மகாநாடு கூடிற்று. உயர்திருவாளர்கள் த. ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, சாமி வேலாயுதம் பிள்ளை, மாணிக்கவாசக சரோ ஜனி யம்மையார், உலக ஊழியனார், மாணிக்கவாசக சரணாலய சுவாமி கள், அ. மு. ச. சம்பந்தனார், மு. இரத்தினவேற்பிள்ளை, அ. மு. சரவண முதலியார், தி. கு. கி. நாராயணசாமி நாயடு ஆகிய ஒன்பது பேரறிஞர்கள் முறையே எற்றுக்கோகமனல் முனிவுண்பது, திரு வள்ளுவரும் திருநெறியும், பெண்மக்களும் சமயக்கல்வியும், பத் தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிச் சைவப்பாரயம், திருவாசகம், கண்ணப்பர், சக்கராப்பள்ளி, காரைக்காலம்மையார், சைவத்தின் தலை சமரசம் (புகைப்படங்களுடன்) என்பனபற்றி மிகத் திறமையாகவும் அவையினர் மகிழும் வண்ணமும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். பிறகு தலைவர்கள் சொற்பொழிவாளர்கள், தொண்டர்கள் முதலிய அனைவர்க்கும் காரியதரிசி நன்றிகூறினார். பின்னர் தலைவர் முடிபுரை யும் கடவுள் வாழ்த்தும் முடிந்து மகாநாடு இனிது நிறைவேறிற்று.